[12th August 1960

*Large and medium-sized industries*

* 144 *Q.*—**Sri P. G. MANICKAM :** கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

நம் ராஜ்யத்தில் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் என்னென்ன தொழிற்சாலைகள் **(Large and Medium Projects)** சேர்க்கப்பட வேண்டுமென்று சென்னை சர்க்கார் நிர்ணயம் செய்திருக்கிருர்கள் ?

The Hon. Sri R. VENKATARAMAN : The programme for Large and Medium Scale Industries under the Third Five-Year Plan has not yet been finalised.

**Sri K. ANBAZHAGAN :** இந்தப் பெரிய அளவு தொழிற்சாலை நடுத்தர அளவு தொழிற்சாலை முதலியவைகள் அமைப்பதுபற்றி டாக்டர் லோகநாதன் குழுவினர் அறிக்கையை சர்க்காருக்கு அனுப்பி இருக்கிருர்கள் அல்லவா ? அதைப்பரிசிலனை செய்து இத்தொழில்கள் பற்றிய கருத்தை அறிவிக்க முடியுமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN :** பரிசிலனை செய்து யாதாஸ்து தயாராக இருக்கிறது. அதில் சில வகைகளில் ராஜ்ய சர்க்காருடைய கருத்தும் நிபுணர்களுடைய கருத்தும் மாறுபட்டிருந்தால் அதைப்பற்றி மீண்டும் அவர்களுக்குத் தெரியப் படுத்தியிருக்கிறது. அவர்களைக் கூட்டி மீண்டும் ஆலோசனை செய்யப்பட்டது. அந்த நிபுணர்கள் நாங்கள் கொடுத்த புள்ளி விவரங்களை வைத்துக்கொண்டு தங்களுடைய யாதாஸ்தில் சில இடங்களில் திருத்திக் கொடுப்பதாகச் சொல்லி இருக்கிருர்கள். அது கிடைத்தவுடனே அதை அச்சடித்து லைப்ரரியில் பத்து காபியாவது வைக்கலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறேன்.

*Golden reef in Tiruttani*

* 145 *Q.*—Sri P. G. MANICKAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) திருத்தணியில் தங்கக்கனி இருப்பதாக அரசாங்கத்தின் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டதா ?

(ஆ) அப்படியானல், பரிசிலனை நடத்தப்பட்டதா ?

(இ) பரிசீலனை நடத்தப்பட்டிருப்பின் விவரங்கள் யாவை ?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) No, Sir.

(*b*) & (*c*) Do not arise.

**Sri K. VINAYAKAM :** சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன் இருந்த இராமலிங்கசுவாமிகள், வடலூருக்கு அடுத்த நெய்வேலியில் பழுப்பு நிலக்கரி கிடைக்கும் என்று சொல்லி இருந்து நடைமுறையில் அது கிடைத்திருக்கிறது. அதே மாதிரி திருத்தணியை பற்றி கச்சியப்ப கவிராயர் எழுதும்போது, அதாவது திருத்தணி ஸ்தல புராணத்தை எழுதும்போது அங்கே பொன் இருக்கிறது என்று எழுதி இருக்கிருர். கேட்பதற்கு அது வேடிக்கையாக

12th August 1960]

இருக்கலாம். நடைமுறையில் அது கிடைக்கலாம். ஆகவே அதைப்பற்றி அங்கு தோண்டிப் பார்த்து பொன் இருக்கிறதா என்று ஆராய்ச்சி செய்து பார்ப்பதற்கு அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : புராணங்களில் இருக்கிற விவரங்களை வைத்துக்கொண்டு காரியங்களைச் செய்வது என்பது இந்த காலத்திற்கு ஒவ்வாது. ஆராய்ச்சி நடத்தி அதன் மூலமாக இருக்கிறது என்று கண்டுபிடித்தால்தான் மேற்கொண்டு நடவடிக்கை எடுத்துக்கொள்ள முடியும். பூகர்ப தத்துவ சாஸ்திரப்படி இருக்கிறது என்று கண்டு பிடித்தால்தான் அதற்கு பணம் செலவு செய்து மேற்கொண்டு நடவடிக்கை எடுக்க தயாராக இருக்கிறோம். அவ்விதம்தான் பணம் செலவு செய்ய தயாராக இருக்கிறோம். ஆகவே பூகர்ப தத்துவ ஆராய்ச்சி செய்ய வேண்டியது அவசியம் ஆகிறது.

*Industrial development*

* Q.—SRI P. G. MANICKAM
SRI A. A. RASHEED
SRI M. P. SARATHI
SRI N. K. PALANISAMI AND
SRI T. SAMPATH } கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) சென்னை அரசாங்கத்தின் பரிசிலனையிலிருக்கும் தொழில் வளர்ச்சிக்கான சர்வே ரிப்போர்ட் எப்போது பிரசுரிக்கப் படும் ?

(ஆ) இந்த ரிப்போர்ட் அச்சடித்தால், அதன் நகல் ஒன்று சட்டசபை நூல் நிலையத்தில் வைக்கப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) & (b) : The National Council of Applied Economic Research has not yet finalised its Report on the Techno-economic Survey of Madras State. A copy of the final report will be placed in the Library of the Madras Legislature in due course.

SRI P. G. MANICKAM : இந்த சர்வே ரிப்போர்ட் எவ்வளவு காலத்திற்குப் பிறகு லைப்ரரியில் வைக்கப்படும் ?

THE HON. SRI R. VENKATARAMAN : அது முடிந்து ஒரு மாதம் அல்லது ஒன்றரை மாதத்தில் லைப்ரரியில் வைக்கப்படும் என்று நினைக்கிறேன்.

SRI A. A. RASHEED : May I know, Sir, the main findings in the report? Is it a fact that the Council have expressed in favour of investing nearly Rs. 2,000 crores on industries in our State and if so what is the idea of the Government?

MR. SPEAKER : The Hon Minister replied that the report had not yet been finalised. How can the hon. Member ask this question which is out of order and how does he know what the report contains when it is not finalised? Anyhow, if the Hon. Minister is prepared to elucidate the subject, I have no objection.